2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 13 மதுரை 24 7-75 வியாழன் மலர் 146

### எம். ஜி. ராமச்சந்திரன் சொல்கிறுர்:

## சர்வாதிகாரம் வந்தால் முதலில் எதிர்ப்பாராம்

சுரூர். ஜுலை. 21—

எந்த நிலையிலும் சரி, சர்வாதிகாரம் வந்தால் 'அதனை எதிர்க்கும் முதல் ஆள் நான்தான் என்று அதிமுக பொதுச்செயலாளர் எம். ஜி. ராமச்சந்திரன் கூறியுள்ளார்.

கரூரில் உள்ள வள்ளுவர் திடலில் நடந்த அதிமுக பொதுக்கூட்டம் ஒன்றில் பேசும்போதே அவர் இவ்வாறு கூறினுர். மேலும், தற்போது பிரகடனப்படுத்தியுள்ள 'அவசர நிலை' கைது ஆகியவற்றை நியாயப்படுத்தியும் பேசினுர்.

## கொச்சியில் விலை உயர்வு

கொச்சி, ஜுலை. 21—

அவசர நிலைப்பிரகடனத்தால் விலைவாசி இறங்குகிறது என்று சொல்லபபட்ட போதிலும், கொச்சியில் தேங்காய் எண்ணெய், மிளகு, ஆகியவற்றின் விலைகள் ஏறியுள்ளன.

முன்பு குவிண்டால் ரூ. 690 க்கு விற்ற தேங்காய் எண்ணெய், இப்போது ரூ. 725 ஆக ஏறியுள்ளது.

கடந்த வாரத்துவக்கத்தில் குவிண்டால் ரூ. 1132ஆக இருந்த மிளகு விலை. இப்போது ரூ. 1165 ஆக உயர்ந்துள்ளது. இதேபோல் ரப்பர் விலையும் ஏறியுள்ளது.

### ★ குழப்பத்துக்கும் அராஜகத்துக்கும் ஏற்பாடு செய்ததாக
### ★ எதிர்க் கட்சித் தலைவர்கள் மீது மந்திரிகள் குற்றச்சாட்டு

# பார்லிமெண்டில் நெருக்கடி நிலை தீர்மானம்

## எதிர்க்கட்சித் தலைவர்கள் கடும் எதிர்ப்பு

புதுடெல்லி, ஜுலை. 23 —

**அரசு அலுவல்களை மட்டுமே கவனிக்க, பார்லிமெண்ட் அவசரக் கூட்டம் கடந்த திங்களன்று இரு சபைகளிலும் ஆரம்பமாயிற்று. அதில் அரசு ஒரு தீர்மானம் கொண்டுவந்தது.**

**சபையில் கேள்வி கேட்கக்கூடாது, கவன ஈர்ப்புப் பிரேரணைகள் கொண்டுவரக்கூடாது, தனிநபர் தீர்மானங்கள் கொண்டுவரக்கூடாது, வேறு எந்த அலுவல்களையும் இந்தக் கூட்டத்தொடரில் கவனிக்கக்கூடாது.**

**இவ்வாறு அலுவல் நடைமுறைவிதிகளை நிறுத்திவைக்கும் தீர்மானத்தை பார்லிமெண்டரி விவகார மந்திரி ரகுராமய்யா லோக் சபையில் கொண்டுவந்தார்.**

**ஒரு மணி நேரத்துக்கும் அதிகமாக எதிர்க்கட்சி மெம்பர்கள் ஆட்சேபங்கள் எழுப்பினர்.**

**பிறகு, சபையின் அலுவல் நடைமுறைகளை நிறுத்திவைக்கும் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு- 301 ஓட்டுகள் ஆதரவாகவும் 76 ஓட்டுகள் எதிராகவும் பதிவாகி ஆளும்கட்சித் தீர்மானம் நிறைவேறியது.**

சபையின் அனைத்து எதிர்க்கட்சிகளையும் சார்ந்த உறுப்பினர்கள் கலந்து கொண்டனர்.

எதிர்க்கட்சி உறுப்பினர்கள் அமரும் சில இடங்கள் காலியாக இருந்தன.

பார்வையாளர் காலரியில் கூட்டம் அதிகமில்லை, பத்திரிகையாளர் எண்ணிக்கையும் கட்டுப்படுத்தப்பட்டது. அநேக வெளிநாட்டு ராஜ தந்திரிகள் வந்திருந்தார்கள்.

### மோகன் தாரியா

எதிர்க்கட்சி வரிசையில் முன்னுள் மத்திய துணை அமைச்சரும், ஆளும் காங்கிரசிலிருந்து விலக்கப்பட்டவருமான திரு மோகன் தாரியா அமர்ந்திருந்தார்.

ஆரம்பத்தில், முன்னுள் அமைச்சரும் சோவியத் யூனியனில் இந்தியத் தூதுவராகஇருந்தவருமான டி.பி.தார், மற்றும்முன்னுள் எம் பிகள், பி என் மண்டல், ராமச்சந்திரா, ஜே அமின் ஆகியோரது மறைவுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

### சபையின் ஒப்புதலுக்கு பிரகடனம் வந்தது

கடந்த ஜுன் மாதம் 26-ம் தேதியன்று ஜனுதிபதி பக்ருதீன் அலி அகமது பிறப்பித்த அவசர நிலைப் பிரகடனத்துக்கு- 2 மாதங்களுக்குள் பார்லிமெண்டின் இரு சபைகளது ஒப்புதலையும் பெறவேண்டுமென்கிறது அரசியல் சட்டம்.

அதன்படி, அவசரநிலைப்பிரகடனத்துக்கு ஒப்புதலைப் பெறவே, இந்த அவசரக்கூட்டம் கூட்டப்பட்டது.

### ஜெகஜீவன்ராம் பேச்சு

அவசரப் பிரகடனத்துக்கு பாராளுமன்றத்தின் ஒப்புதலைக் கோரும் தீர்மானத்தை மந்திரி ஜெகஜீவன்ராம் கொண்டு வந்து பேசினுர். இதே போன்ற தீர்மானத்தை ராஜ்ய சபையில் மந்திரி பிரும்மானந்தரெட்டி கொண்டு வந்தார்.

### தீர்மானம்

60 பக்கத் தீர்மானத்தை கொண்டு வந்து ஜெகஜீவன்ராம் பேசினுர். அவர் பேசுகையில்:

சில எதிர்க்கட்சிகள் வரம்பு மீறி நடந்து. நாட்டில் அராஜகத்தையும் குழப்பத்தையும் ஏற்படுத்த முயன்றுர்கள் என்றும் — அதனுல்தான் தக்க சமயத்தில் அரசு தலையிட்டு. அராஜகத்தைதவிர்த்து ஒழுங்கை நிலைநாட்டலாயிற்று என்றும் கூறினுர்.

'புரட்சி என்று பேசக்கூடிய தலைவர்கள், இந்தியநாட்டில்பெரியமாறுதல்கள் தான்ஏற்பட்டிருக்கின்றனவேதவிர, புரட்சி எதுவும் ஏற்படவில்லையென்ற வரலாற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும்" என்றும் கூறினுர்.

அவசர நிலைப் பிரகடனமானது அரசியல் சட்ட வரம்புக்கு உட்பட்டதுதான் என்றும் கூறினுர்.

"இனிமேல் கலவரங்கள் இருக்காது என்று உத்தரவாதம் ஏற்பட்டபிறகுதான் —சமூக விரோத சக்திகள் நாட்டின் பாதுகாப்புக்கு ஆபத்து ஏற்படுத்திட முடியாது என்ற நிலைமை ஏற்படும்வரை அவசர நிலைப் பிரகடனம் நீடிக்கும்" என்றும் கூறினுர்.

ஜனநாயகத்தின் பேரைச் சொல்லிக் கொண்டு இந்திரா காந்திக்கும் அவரது அரசாங்கத்துக்கும் விரோதமான ஆழமான சதி உறுமிக்கொண்டிருந்ததாகவும், அரசாங்க அலுவலகள் நடைபெருதபடியும், தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபைகளை வலுக்கட்டாயமாகக் கலைக்கக்கோரியும் கலவரம் செய்தனர் என்றும் கூறினுர்.

பரந்த அளவில் அரசு மீது வெறுப்பையும் ஆத்திரத்தையும் எதிர்க்கட்சிகள் பரப்பி விட்டதினுலும், அதிகாரிகளின் உத்தரவுகளை மீறும்படி தூண்டிவிட்டதினுலும்- இவர்களை வழக்கமான போலீஸ் நடவடிக்கைகளைக் கொண்டு சமாளிக்க முடியாது என்ற நிலைமை ஏற்பட்டவுடனே, தக்க சமயத்தில் அரசு முன்வந்து அவசர நிலைப் பிரகடனத்தைப் பிறப்பித்தது என்றும் கூறினுர்.

அலகாபாத் தீர்ப்பு வெளிவந்து சுப்ரீம் போர்ட்டுக்கு அப்பீல் செய்திருக்கும் போதே- ஜுன் 21 முதல் 25 க்குள்எதிர்க்கட்சியினர் பல கூட்டங்களை நடத்தி இந்திராகாந்தியை ஆட்சிபீடத்திலிருந்து அகற்ற திட்டங்கள் தீட்டினுர்கள்'' என்றும் தீர்மானத்தில் குறிப்பிட்டிருப்பதை வாசித்தார்.

### கூட்டம் போட்டார்கள்

எதிர்க்கட்சியினர் நடத்திய கூட்டங்களைப் பற்றி தீர்மானம் பின் வருமாறு கூறுகிறது.

"கடந்த ஜுன் 25ந் தேதி காலையில் எதிர்க்கட்சிகளின் திட்டக் கமிட்டிக் கூட்டமானது, புதுடில்லியில் உ. பி. நிவாஸில் நடந்தது. அங்கு சரண் சிங் தங்கியிருக்கிறுர்.

இக்கூட்டத்தில் ஸ்தாபன காங்கிரஸின் தலைவர்கள், ஜனசங், பி.எல்.டி. சோஷலிஸ்ட் கட்சி, அகாலிதளம், ஜெயப்பிரகாஷ் நாராயண், ஜோதிர்மாய் பாசு (மார்க்சிஸ்ட்), இரா. செழியன் (தி மு க) ஆகியோர் கலந்துகொண்டதாகவும் — இக்கமிட்டி, லோக் சங்கார சமிதி என்ற அமைப்பை நிறுவி, அதற்கு தலைவராக தேசாயையும், செயலாளராக நாஞஜி தேஷ்முக்கையும், அசோக் மேத்தாவை பொருளாளராகவும் தேர்ந்தெடுத்தது'' என்றும் தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஜெயப்பிரகாஷ் நாராயணன் போலீஸும் இராணுவமும் ஊழியர்களும் அரசாங்கக் கட்டளைகளுக்குப் பணியக் கூடாது'' என்று பேசியதாகவும் இந்திரா காந்தியின் அப்பீல் வரும்போது, அதை விசாரிக்க சுப்ரீம் கோர்ட்டின் பிரதம நீதிபதி மறுத்துவிடவேண்டும் என்றும் பேசியதாகவும் தீர்மானத்தில் அழுத்தமாகச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

### இரயில்வே ஸ்ட்ரைக்

மேலும் அந்தத் தீர்மானத்தில், "நாட்டின் பொருளாதாரத்தைச் சீர்குலைக்கும் நோக்கத்துடன்தான்இரயில்வே ஸ்ட்ரைக்கும் தூண்டி விடப்பட்டது என்றும்— இரயில்வே தொழிலாளர் தலைவர் ஜார்ஜ் பெர்ணுண்டஸ், வெளி நாட்டிலிருந்து பணம் வாங்கினுர் என்றும்— இரயில்வே ஸ்ட்ரைக் தோற்றுப்போன பிற்பாடு பெர்ணுண்டஸ், சீனக் கம்யூனிஸ்ட் தலைவர் மா-சே.துங்-குக்கு ஒரு கடிதம் எழுதினுரென்றும் — அக்கடிதத்தில், "பல்லாண்டுகளாக மறுக்கப்பட்டு வரும் நீதியைப் பெறுவதற்காக, இந்தியரயில்வே தொழிலாளர்கள் மகோன்னதமான போராட்டத்தை நடத்திய போது, இந்திய அரசாங்கம் ஈவிரக்கமற்ற அடககுமுறையைக் கட்டவிழ்த்து விட்டது'' என்று கண்டிருப்பதாகவும் தீர்மானத்தில் சுட்டிக் காட்டியுள்ளது.

மேல்சபையிலும் இதே தீர்மானத்தை பிரும்மானந்தரெட்டி வாசித்தார்.

### எதிர்ப்பு

லோக்சபையில் இத்தீர்மானத்தை எதிர்த்து, மார்க்சிஸ்ட் தலைவர் ஏ. கே. கோபாலன், தி. மு. க. தலைவர் இரா. செழியன், ஜனசங்கத்தலைவர் ஜெகநாத் ராவ் ஜோஷி, பழைய காங்கிரஸ் தலைவர் பிரசன்னுபாய் மெகதா ஆகியோர் பேசினர்.

ராஜ்யசபையில் இத்தீர்மானத்தை எதிர்த்து, மார்க்சிஸ்ட் தலைவர் எஸ். கே. கங்குலி, தி. மு. கழகத்தலைவர் எஸ். எஸ். மாரிச்சாமி, ஜனசங்கபிரகாஷ்வீர்சாஸ்திரி, பாரதீயகிரந்திதளம் மகாதேவ் பிரசாத் ஆகியோர் பேசினர்.

## ரொடீசியா பிரதமருக்கு விடுதலை இயக்கம் எச்சரிக்கை

டேர்எஸ்சாம், ஜுலை: 21—

ரொடிசீயா நாட்டின் வெள்ளை நிறவெறியனுன ஐயான்ஸித்தின் அரசாங்கம் இன்னும் 3 மாதத்திற்குள் அரசியல் சட்ட ரீதியானமாநாடு ஒன்றைகூட்ட வேண்டும் இல்லையெனில் பெரும்பாலான ஆப்ரிக்க மக்களின் ஆட்சி ரொடிசீயாவில் ஏற்படும் பொருட்டு கொரில்லாயுத்தம் தொடங்கப்படும் என ஆப்பிரிக்க தேசிய கவுன்சிலின் தலைவர் பிஷப்அபெல் முஜொர்வா சேர்மன் என்பவர் பேட்டியொன்றில் எச்சரித்துள்ளார்.

### பெரும்பான்மை மக்களின் எண்ணம்

மேலும் ஆப்பிரிக்க தேசிய கவுன்சிலின் மத்திய கமிட்டிக்கூட்டம் இம்மாதத்தின் ஆரம்பத்தில் கூடியது என்றும், அதில் ரொடிசீய பிரதமர் ஐயான்ஸ்மித்துடன் பேச்சு வார்த்தை நடத்துவதற்கு எந்த அளவுக்கு சாத்தியம் உள்ளது என்பது பற்றியும் அப்படியொருபேச்சு வார்த்தை நடைபெறுவிடில் மாற்று நிலை என்ன எடுப்பது என்பதை பற்றியும் பேசப்பட்டது என்று அவர் தெரிவித்தார்.

மேலும், டான்ஜானியா அரசாங்கம் பத்திரிகையான சன்டே நியூஸ் பத்திரிகையைமேற்கோள்காட்டிஅவர் பேசுகையில் ரொடிசீயாவில் ரத்தம் சிந்துவதை தடுப்பதற்கு ஒரேவழி அரசியல் சட்ட அமைப்பு மாநாடு ஒன்றைக் கூட்டி ரொடிசியா நாட்டின் பெரும்பகுதி மக்களின் ஆட்சியை ஏற்படுத்துவதற்கு ஏற்பாடுகள் செய்வதே என்றும் குறிப்பிட்டார்.

இன்னும் 3 மாதத்திற்குள் அப்படியொரு மாநாடு நடைபெற வில்லையானுல், ரொடிசீயா நாட்டு பெரும்பகுதிமக்களின் கோரிக்கையை ஏற்கமறுப்பதற்கான வழியே என்பதை நாங்கள் புரிந்து கொள்வோம் என்று அவர் குறிப்பிடடார்.

## தமிழ்நாட்டில் பஞ்சாயத்து தேர்தல் ஒத்திபோடப்படும்

சென்னை. ஜுலை. 21—

தமிழ்நாட்டில் பஞ்சாயத்து தேர்தல் மீண்டும் ஒத்திபோடப்படலாம் என்றும் அதற்கான அவசரச்சட்டம் ஒன்றை கூடியவிரைவில் தமிழக அரசு பிறப்பிக்கக் கூடும் என்றும் தெரிகிறது.

நாட்டில் அவசர நிலைபிரகடனம் செய்யப்பட்டிருப்பதாலும், வறட்சி நிலைமை நீடிப்பதாலும் நிர்வாக வசதியை முன்னிட்டும் பஞ்சாயத்து தேர்தல் ஒத்திபோடப்படலாம்.

தமிழ் நாட்டில் 13 ஆயிரம் பஞ்சாயத்துகளும் 374 பஞ்சாயத்து யூனியன்கள் உள்ளன,

### சி ஐ. டி. யூ. கூட்டம் ஒத்திவைப்பு

தோழர்களே.

ஜுலை மாதம் 30. 31 தேதிகளில் மதுரையில் நடைபெறுவதாகயிருந்த சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக் குழுவின் கூட்டம் ஒத்திவைக்கப்பட்டுள்ளது. எனவே, அத்தேதிகளில் அக்கூட்டம் நடைபெருது.

மதுரை, 22—7—75

ஏ. நல்லசிவன்
செயலாளர்,
சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக் குழு

## மீன் பிடிக்கவும் உலக பேங்க் கடன் தானு?

விசாகபட்டினம். ஜுலை. 21—

அமெரிக்கா ஏகாதிபத்தியத்தின் நவீன காலனியாதிக்கக் கொள்கையை பரப்புவதற்கு பயன்பட்டுவரும் உலக பேங்கிடமிருந்து மீன் பிடிப்பதற்கு கூட இந்தியா கடனுக்காக கையேந்தியுள்ளது.

விசாகப்பட்டினம் கடற்கரையில் மீன் பிடித்தளங்கள் கட்டுவதற்கு உலக பேங்கு கடன்தர ஒப்புக்கொண்டுள்ளதாம். மொத்தச் செலவில் 50 சத வீதம் உலக பேங்க் கடன் மூலம் பெறப்படும் என்றும் இக்கடன் பற்றிய இறுதி முடிவு எடுத்த ஜுலை வாக்கில்எடுக்கப்படும் என்றும் மத்திய அரசு உணவு இலாகா மீன் பிரிவு செயலாளர் அறிவித்தனார்.

விசாகப்பட்டினம் மீன் பிடித்தளத்திட்டத்திற்கு கடன் தரவிருக்கும் உலக பேங்க், பிரான்சிஸ் பூர் கோய்ஸ் என்பவரின் தலைமையில் ஒரு குழுவை அனுப்பியுள்ளது. அக்குழுவினர் விசாகப்பட்டின கடற்கரையெல்லாம் பார்வையிடடுள்ளது. அக்குழுவினருடன் மத்திய உணவு இலாகாவின் மீன் பிரிவுச்செயலாளரும் சென்றுர்.

விசாகப்பட்டினம் கடற்கரையில்மீன்பிடிதளம் கட்ட 22 கோடி செலவாகும் என மதிப்பிடப்படடுள்ளது என்றும் விசேஷ சிபாரிசுகளை உலகபேங்க் குழுவினாசெய்வார்கள் என்றும் கூறினுர் மீன் பிரிவு செயலாளர்.

கேரளாவிலும் குஜராத்திலும் மீன்பிடிதளங்கள்கட்ட உலக பேங்கின் கடன் பெறுவது என்பதும் பரிசீலனையில் உள்ளது. என்றும் அவர் தெரிவிததார்.

### நாடாளுமன்ற உறுப்பினர் பாதுகாப்புக்கு உத்தரவாதமில்லை

புதுடெல்லி. ஜுலை. 21—

நாடாளு மன்றத்திற்குள் தான் நாடாளுமன்ற உறுப்பினர்களின் பாதுகாப்புக்கு, தான் உத்திரவாதம் கொடுக்க முடியும் என்றும், நாடாளுமன்றத்திற்கு வெளியே அவர்களது பாதுகாப்புக்கு உத்திரவாதம் கொடுக்க முடியாதுஎன்றும் மாநிலங்கள்அவை சேர்மன் திரு ஜாட்டி கூறிவிட்டார்.

நடைபெறும் நாடாளுமன்ற கூட்டத் தொடரில் கலந்து கொள்ளுமாறு ஜனுதிபதியால் அழைக்கப்பட்ட உறுப்பினர்கள்யாரும் அக்கூட்ட தொடரின்போது கைது செய்யப்படமாட்டார்கள் என உத்திரவாதம் கொடுக்கப்பட வேண்டும் என எதிர்க்கட்சியினர் கோரியபோதே மேற்கண்டவாறு பதில் அளித்தார்.

### மகாராஷ்ட்ராவில் கைது-963

பம்பாய், ஜுலை.22—

அவசரநிலைப் பிரகடனம் செய்யப்பட்டதிலிருந்து இதுவரை 963 பேர் 'மிசா' பாதுகாப்புச் சட்டங்களின் கீழ் கைது செய்யப்பட்டுள்ளனர். இன்று மட்டும் 45 பேர் கைது.

### சிறையில் இருக்கும் முன்னுள் அமைச்சர் உண்ணுவிரதம்

லண்டன், ஜுலை.21—

தற்போது சிறையில் அடைக்கப்பட்டுள்ள பிரிட்டிஷ் முன்னுள் அமைச்சரும், நாடாளுமன்ற உறுப்பினருமான ஜான் ஸ்டோன் ஹவுஸ் சிறைக்குள் உண்ணுவிரதம் இருக்கிறுர். இத்தகவலை அவரது மகள் பியாட்ரிஸ் செய்தியாளர்களிடம் 20.ந் தேதி கூறினுர்.

8 மாதங்களுக்கு முன்பு சில குற்றங்களின் பேரில் கைது செய்ய போலீசார் முயற்சித்தபோது, ஸ்டோன் ஹவுஸ் தலைமறைவானுராம். சிலநாட்களுக்கு முன் அவரை போலீசார் கைது செய்து சிறையில் அடைத்தனர். அவரை ஜாமீனில் விடக்கோரி மனுச் செய்ததையும் மாஜிஸ்ட்ரேட் கோர்ட் நிராகரித்து விட்டது. அதைத்தொடர்ந்து ஸ்டோன் ஹவுஸ் உண்ணுவிரதம் மேற்கொண்டிருக்கிறுராம்.

### குஜராத்தில்-354

அகமதாபாத், ஜுலை. 20—

நாட்டில் அவசர நிலைப் பிரகடனம் செய்யப்பட்ட பின்பு, குஜராத் மாநிலத்தில் 'மிசா' மற்றும் பல சட்டங்களின் கீழ் இதுவரை 354 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

தீக்கதிர்

# பாங்குகள் தேச உடைமையான நோக்கம் நிறைவேறவில்லை

"கடந்த ஐந்து வருடங்களில் புள்ளி விவரப்படி, ஏராளமாக வளர்ந்துள்ள தேசிய மயமாக்கப்பட்ட பாங்குகள் பெரும்பான்மையான விவசாயப் பகுதிகளையும், பொருளாதாரத்தில் பலகீனமாக உள்ள பகுதிகளையும் அணுகத்தவறியுள்ளன". இது நாம் கூறும் வார்த்தைகள் அல்ல. சென்னைக்கு விஜயம் செய்த ரிசர்வ் பாங்க் கவர்னர் திரு என் சி சென்குப்தா பாங்கர்கள் கிளப் அளித்த விருந்தில் உதிர்த்த கருத்துக்கள் இவை. பாங்குகள் தேசியமயமாக்கியதில் இரண்டு முக்கிய நோக்கங்கள் முன் வைக்கப்பட்டனவாம். 1) விவசாயிகளுக்கு குறைந்த வட்டியில் கடன் வழங்கவேண்டும். 4% சதவிகித வட்டிக்கு அதிகப்படாமல் இது இருக்க வேண்டுமென்றும் கூறப்பட்டது. இதனால் சிறிது நஷ்டமேற்பட்டாலும் இறுதியில் பாங்குகளைப்பற்றி விவசாயிகளிடம் நல்லஅபிப்பிராயமும் அவர்களின் பேராதரவும் கிடைக்குமென்று எடுத்துகாட்டப்பட்டது 2) ஒவ்வொரு மாவட்டத்திலும் சில முக்கிய பாங்குகள் இணைந்த நடவடிக்கைகள் எடுத்து மாவட்டத்தில் பாங்குகள் வேரூன்றுவதற்கான வாய்ப்புக்களை ஆராய்ந்து, மாவட்ட மக்களின் வருக்கும் நன்மை பயக்கும் திட்டங்களை மேற்கொள்ள வேண்டும்.

மேற்கூறிய இரண்டு நோக்கங்களும் நிறைவேற்றப்படவில்லை என்று கூறினர். ரிசர்வ் பாங்க் கவர்னர். பாங்குகள் தமிழ்நாட்டில் அதிகரித்துள்ளன என்று புள்ளி விவரங்கள் கூறினாலும்—ஏராளமான விவசாயிகள் உள்ள தமிழ்நாட்டில் சுமார் ரூ.70கோடிதான் விவசாயத் துறையில் கடனுதவி செய்யப்பட்டிருக்கிறதென்றும் அதே சமயத்தில் தொழில் வளர்ச்சிக்காக ரூ 545 கோடி அட்வான்சாகக் கொடுக்கப்பட்டிருக்கிறதென்றும் அங்கலாய்த்துக் கொண்டிருக்கிறர்.

ரிசர்வ்பாங்க் கவர்னரின் கண்டுபிடிப்பு ஒன்றும்புதிய விஷயமல்ல. பாங்குகள் தேசிய மயமாக்கப்பட்ட பின் கடந்த இரண்டு மூன்று வருடங்களாக விவசாய அரங்கம் புறக்கணிக்கப்பட்டு தொழில்துறையில் பாங்குகளின் உதவியை இதற்கு முன்பு பெற்று வந்த பெரும் புள்ளிகளே தேசஉடைமையாக்கப்பட்ட பிறகும் பெற்று வருகின்றனர் என்று சர்க்கார் அறிக்கைகளே சுட்டிக் காட்டுகின்றன என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியினர் பார்லிமெண்டிலும் பத்திரிகைகளிலும் எடுத்துக்கூறி வந்துள்ளனர். அதாவது தேச உடைமையாக்கப்பட்ட நடவடிக்கை முதலாளிகளுக்கு மேலும் உதவியளிக்கும் கருவியாயிற்றே தவிர பாமர மக்களுக்கு எட்டவில்லை என்பதே இதன் பொருள்.

இதே சமயத்தில் சர்க்காரின் பல நிதி நிறுவனங்களிலிருந்தும் தேசஉடைமையாக்கப்பட்ட பாங்குகளிலிருந்தும் பெருமுதலாளிகளுக்கு வழங்கப்படும் கடன்களுக்கு விதிக்கப்பட்டுள்ள தடைகளையும் நிபந்தனைகளையும் தளர்த்த வேண்டுமென்று ஓயாது முதலாளிகளின் ஸ்தாபனங்கள் சர்க்காரை நிர்ப்பந்தித்து ஓரளவு வெற்றியும் கண்டிருக்கின்றன.

தமிழ் நாட்டில் உதாரணத்திற்கு குறிப்பாக சென்னை நகரத்தைப் பற்றியும் நேற்றைய விருந்தில் பாங்கர் கிளப் தலைவர் திரு லட்சுமிநாராயணன் வெளியிட்ட பின்வரும் தகவல்கள் நிலைமையை எடுத்துக் காட்டுகின்றன.

கடந்த 2 வருடங்களில் சென்னை பாங்குகளில் டெபாசிட் ஆன தொகை ரூ 206 கோடியிலிருந்து ரூ 372 கோடியாக உயர்ந்திருக்கிறது! அட்வான்சுகள் ரூ 283 கோடியிலிருந்து ரூ 329 கோடியாயிருக்கின்றன. தமிழ் மாநிலம் முழுவதுமுள்ள பாங்குகள் கடனுகக் கொடுத்துள்ள ரூ 340 கோடியில் பாதிக்குமேல் சென்னைநகரக்கிளை பாங்குகளே வழங்கியவையாகும். தமிழ்நாடு முழுவதுமுள்ள பாங்க் டெபாசிஸ்ட் தொகை ரூ 761 கோடியாகும்.

தமிழ்நாட்டில் தொழில்களுக்காக பாங்குகள் கடனுக வழங்கியுள்ள தொகையான ரூ 545 கோடியின் விவரங்கள் பின்வருமாறு:—

(இதில் ரூ. 110 கோடி சிறு தொழில்களுக்கு) பஞ்சாலைகளுக்கு ரூ120கோடி. எஞ்சினியரிங் தொழில்களுக்கு ரூ 80 கோடி, ரசாயனத் தொழில்களுக்கு (உரத் தொழில் உட்பட) ரூ 54கோடி, போக்குவரத்து தொழிலுக்கு ரூ 42 கோடி, தோல்ஷாப்புகள் முதலியவற்றிற்கு ரூ 39கோடி உலோகத் தொழில்களுக்கு ரூ 23கோடி, சக்கரைத் தொழிலுக்கு ரூ 16 கோடி, சில்லரை வியாபாரத் தொழிலுக்கு ரூ 21 கோடி, தனிப்பட்ட முறையில் அட்வான்சாக ரூ 54 கோடியும், வேறு சில தொழில் அட்வான்சாகவும் ரூ45 கோடி கொடுக்கப்பட்டுள்ளது.

விவசாயத்திற்கு கொடுக்கப்பட்டுள்ள கடன் தொகை ரூ 73கோடியாகும்.

இப்போது கிராமங்களை கவனிக்கப் போவதாகவும், விவசாயத்திற்கு உதவி செய்யப் போவதாகவும் கிராமங்களுக்கெனவே பாங்குகளை துவக்கப் போவதாகவும் அரசினர் தரப்பில் கூறுவது இருக்கட்டும். ஆனால் தொழில்களுக்கும் விவசாயத்திற்கும் உரித்தான விகிதத்தில் உதவியளிக்க — சர்க்காரின் அதிகாரங்களைத் தவிர வேறு எந்த உத்தரவாதமும் நமக்குப் புலப்படவில்லை. மக்களும் அவர்களது பிரதிநிதிகளும் ஆர்வத்துடன் பங்கு கொள்ளுமளவுக்கு இந்த ஏற்பாடுகள் அவர்களது கண்காணிப்புடன் நடந்தால்தான் ஏதாவது நன்மை மக்களுக்கு கிடைக்குமென்பதையே அனுபவம் உணர்த்துகிறது.

## எங்கிருந்தாலும் ஒன்றுதான்

பாட்னா, ஜூலை. 21— பீகார் மாநிலத்தின் வலது கம்யூனிஸ்ட் கட்சியின் முக்கிய தலைவர்களில் ஒருவரான கிருஷ்ணபல்லப பல்லபா காந்த் என்பவர் காங்கிரசுக் கட்சியில் சேர்ந்துள்ளார். இதனை காங்கிரசுக்கட்சியின் பீகார் மாநில செயலாளர் லலிதீஸ்வரர் ஜா என்பவர் அறிக்கையொன்றின் மூலம் தெரிவித்துள்ளார். மேலும் பல்லபாகாந்த்தோடு 50 பேரும் சேர்ந்து வந்துள்ளனராம்.

பல்லபாகாந்த் கம்பெனி புத்திசாலித்தனமான நடவடிக்கையைத்தான் மேற்கொண்டுள்ளது. வலது கம்யூனிஸ்ட் கட்சியில் இருந்து கொண்டு காங்கிரசுக்கு வால்பிடித்துக் கொண்டிருப்பதைக் காட்டிலும் காங்கிரசுக் கட்சியிலேயே சேர்ந்து ஐக்கியமாகி விடுவது நல்லது என தீர்மானித்துவிட்டது. அங்கிருந்தாலும் ஒன்றுதான். இங்கிருந்தாலும் ஒன்று தான்.

## காங்கிரசார் சஸ்பெண்ட்

தாணு, ஜூலை. 22— மகாராஷ்டிர மாநிலத்தில் தாணு மாவட்டத்திலுள்ள காங்கிரஸ் கட்சியின் முக்கிய ஊழியர்கள் நால்வர் சஸ்பெண்ட் செய்யப்பட்டனர்.

கடந்த வெள்ளிக்கிழமை கூடிய தாணு மாவட்ட காங்கிரஸ் கட்சியின் நிர்வாகக் கமிட்டி இந்த நால்வரையும் சஸ்பெண்ட் செய்தது.

கல்யாண் தாலுகா பஞ்சாயத்து சமிதி தலைவர் பண்டாளக் பகத், மொகாதா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் பி எம் முல்யீ, வசந்த் படீல், எஸ் கே கோவிந்த் ஆகிய நால்வரும் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளார்கள்.

# சர்க்கரை ஆலைகளில் நெருக்கடி தீர வழி

## கரும்பு விலையை ஏற்றிக் கொடுப்பதும் சர்க்கரை ஆலை தேசவுடைமையும் தான்

திருச்சி, ஜூலை. 22— தமிழ்நாட்டில் கடந்த 1973 அக்டோபர் 1 முதல், 1974 செப்டம்பர் 30 வரையிலான ஒரு ஆண்டில் என்றைக்குமே கண்டிராத அளவுக்கு 4 லட்சத்து 43 ஆயிரம் டன் சர்க்கரை உற்பத்தி ஆயிற்று. கால நிலையும் அதற்கேற்றவாறு அமைந்திருந்தது.

ஆனால் கடந்த வருடம ஏற்பட்ட கடும் வறட்சியின் காரணமாக, கரும்பு உற்பத்தி 40 சதமானம்குறைந்து விட்டது.

கரும்புச் சாகுபடி குறைந்து போனதற்குக் காரணம், வறட்சி மட்டுமல்ல கரும்பின் விலையே குறைந்து போனதும்-நெல். வாழை முதலியவற்றின் விலைகள் ஏறிப் போனதும் காரணமாகும். மற்றும் கரும்பு பயிருக்கு ஆகும் உற்பத்திச் செலவு அதிகரித்ததும் ஒரு காரணமாகும்.

கரும்புச் சாகுபடி குறைந்து போனதால், சர்க்கரை ஆலைகளுக்கு போதிய கரும்பு கிடைக்காமல் லே-ஆப் விடப்படுகிறது.

இந்த நிலைமை 1976—77ம் வருடம் வரையும் கூட நீடிக்கக் கூடுமெனத் தெரிகிறது.

### சர்க்கரை உற்பத்தி வளர்ந்து வந்தது

தமிழ்நாட்டில் சர்க்கரைத் தொழில் 1969ம் ஆண்டு முதல் தொடர்ச்சியாக வளர்ந்து வந்தது.

1969—70ம் ஆண்டிலே 2லட்சத்து 88 ஆயிரம் டன் சர்க்கரைஉற்பத்தியாயிற்று. அது 1972—73ம் ஆண்டில் 3லட்சத்து 31 ஆயிரம் டன்னுக அதிகரிக்கலாயிற்று. 1973—74ம் ஆண்டிலே இந்த அளவு வெகுவேகமாக அதிகரித்து, என்றுமில்லாத அளவுக்கு சிகரமாக 4 லட்சத்து 43 ஆயிரம் டன்னுக அதிகரித்தது.

### திட்டகாலத்தில்

4.வது திட்ட காலத்தில் தமிழ்நாட்டின் சர்க்கரை உற்பத்தியானது 54 சதமானமாக இருந்தது. 1973—74-ம் ஆண்டில் மாத்திரம் முந்திய ஆண்டைக் காட்டிலும் 34 சதமானம் அதிகரித்தது.

### சுருங்கிவிட்டது

இப்போது, கரும்புப்பயிர் போடுவது சுருங்கிவிட்டது. நடப்பு ஆண்டில் 40சதமான பரப்பளவு, கரும்புச்சாகுபடி நிலம் குறைந்துவிட்டது. அதனல் சர்க்கரை உற்பத்தியும் வெகுவாகக் குறைந்து விட்டது,

### ஏற்றுமதி

சென்ற ஆண்டில் ஈரான், மேற்கு ஆசியா. சூடான், ஸ்ரீலங்கா முதலான நாடுகளுக்கு 50 ஆயிரம் டன் சக்கரை தமிழ்நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டது.

### கரும்பு விலைகளை ஏற்று ஆலைகளை அரசு எடு

இன்றைய சர்க்கரைத் தொழிலைப் பிடித்துள்ள நெருக்கடியைத் தீர்க்க வேண்டுமானுல், விவசாயிகளுக்கு கரும்பு விலையை அதிகரித்துக் கொடுக்க வேண்டும்.

எல்லாவற்றுக்கும், மேலாகசர்க்கரை ஆலைகளையெல்லாம் அரசுடைமை ஆக்குவதின் மூலம்தான் சர்க்கரைத் தொழில் நெருக்கடி தீரும். கரும்பு விவசாயிகள் சங்கங்களும் சர்க்கரை ஆலைத் தொழிலாளர் சங்கங்களும், ஒரு மனதாக இதைத்தான் வற்புறுத்துகின்றன.

# 240 நாட்கள் வேலை செய்தோருக்கு

# வேலை நிரந்தரம்

## மின் ஊழியர் சங்கம் கோரிக்கை

மேட்டூர், ஜூலை.21— திருமணக் கடன் விண்ணப்பித்த அனைவருக்கும் கடன்வழங்கவேண்டும் என்றும், 240 நாட்கள் வேலை பார்த்த தினக் கூலிகள் அனைவரையும் நிரந்தரம் செய்யவேண்டும் என்றும் இங்கு நடந்த மேட்டூர் மின் ஊழியர் சங்கத்தின் பொதுக் குழுக்கூட்டம் வற்புறுத்தியது.

### கோரிக்கை

தவிர சுகாதார வசதி, என் ஜி ஓ க்களுக்கு செய்வது போல மின் ஊழியர்களுக்கும் வீடு கட்டித்தருதல், பழி வாங்கலை ரத்துச் செய்தல் ஆகிய கோரிக்கைகளும் வற்புறுத்தப்பட்டன.

மேட்டூர் ரஷியன் குவார்ட்டர்சில் நடந்த இப் பொதுக்குழுக் கூட்டத்துக்கு பி. சோமசுந்தரம் தலைமை வகித்தார்.

75-76-ம் ஆண்டுக்கான நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவராக பி சோமசுந்தரம். துணைத்தலைவர்களாக சின்னத்தம்பி, சீரங்கன், பொதுச் செயலாளராக குட்டியப்பன், அமைப்புச் செயலாளராக மாணிக்கம், இணைச் செயலாளர்களாக ரவீந்திரன், வெங்கடாசலம், சாத்து, காளியப்பன், ராமமூர்த்தி, குப்பையாண்டி— பொருளாளராக வரதப்பன் ஆகியோர் தேர்தெடுக்கப்பட்டனர்.

மற்றும் மத்திய அமைப்பின் செயற்குழு உறுப்பினராக குட்டியப்பனும், பொதுக் குழு உறுப்பினர்களாக சோமசுந்தரம், குப்பையாண்டி ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

கிளைச் செயலாளர்களாக அருணசலம் (ஜலகண்டாபுரம்), ராஜாராம் (ஓமலூர்), ஜான்ராம் (சேலம்), சேப் பெருமாள் (ஆத்தூர்), ராமன் (இராசிபுரம்), விஜயன் (சேந்தமங்கலம்). தோமஸ் (சிவில் மேட்டூர்), கந்தசாமி (நாமக்கல்தெற்கு), காளியப்பன் (நாமக்கல் வடக்கு), பெரியசாமி (வேலூர்). பழனிவேல், எம். அர்த்தணாரி (திருச்செங்கோடு) ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## ஆசிரியருக்கு

### உள்ள கார்டும் போச்சு அரிசி எப்போ கிடைக்கும்?

ஐயா,

கோவில் பட்டிக்கும் அதன் சுற்றுக்கிராமங்களுக்கும் கடந்த 6 மாத காலமாக குடும்பக் கார்டுகள் கொடுப்பதை சிவில் சப்ளை இலாகா நிறுத்தி வைத்துள்ளது.

இவ்வாறு நிறுத்தப்பட்டுள்ளதற்கு — அரசு அச்சகத்திலிருந்து புதிய கார்டுகள் வரவில்லை என்றும், போலிக் கார்டுகள் அதிகமாகப் புழக்கத்தில் இருப்பதாகவும், அதைக் கண்டுபிடிக்க தணிக்கை செய்யப் போகிறோம் என்றும் அதிகாரிகள் கூறினார்கள்.

இதனல், வீடு மாற்றம் செய்தவர்களும், வெளியூரிலிருந்துவந்து குடியேறியவர்களும் — குடும்பக் கார்டு கிடைக்காமல்—அதிக விலை கொடுத்து குறைந்த பட்சத் தேவையான உணவுப் பொருட்கள் வாங்க முடியாமல் தவிக்கிறார்கள். வெளி மார்க்கெட்டில் அநியாய விலை கொடுப்பதால் வாழ்க்கை நடத்தமுடியாமல் திணறுகிறார்கள்.

புதிய கார்டு கணக்கெடுப்பு நடத்த வேண்டும் என்று மாவட்ட ஆட்சித் தலைவர் உத்திரவிட்டார். அவ்வாறுகணக்கெடுத்ததில் நகரத்தில் பல வீடுகள், ஏன் சில தெருக்களே கூட கணக்கெடுக்கப்படாமல்விடுபட்டுப் போயின.

அப்படிக் கணக்கெடுப்பில் விட்டுப்போனவீடுகளைச் சேர்ந்த மக்களுக்கு — ஏற்கனவே ரேசன் கடைகளில் வழங்கப்பட்டு வந்த 2 கிலோ அரிசிக்கும் ஆபத்து வந்து விட்டது. 'உள்ளதும் போச்சுடா நொள்ளைக் கண்ணு' என்ற கதையாகி விட்டது.

உள்ள அரிசியையும் இழந்த மக்கள், கோவில் பட்டி வட்டாட்சி அலுவலகத்துக்கு — தங்களது சொந்த வேலைகளைக் கூட கவனிக்காது—நாள்தோறும் படையெடுத்து சென்றவண்ணம் இருக்கிறார்கள். ஆனல் தாசில்தாரும், சப்ளை அதிகாரிகளும் வெளியூர் 'கேம்ப்' போய் விட்டார்கள் என்று அடிக்கடி சொல்லப்படுகிறது. பொதுமக்களைச் சந்திக்கத் தெம்பில்லாமல்தான் இவ்வாறு 'கேம்ப்' போய்விடுகிறார்கள் போலும் என்று பொதுமக்கள் பேசிக்கொள்கிறார்கள்.

எனவே, கார்டு கிடைக்காத பொதுமக்களுக்கு உடனடியாக கார்டு வழங்கி, அரிசி கிடைக்க ஏற்பாடு செய்யும்படி சம்பந்தப்பட்ட அதிகாரிகளைக் கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
செ. கணேசன்
(புதுக்கிராமம்)
கோவில்பட்டி.

## கோவில்பட்டி அரசு மருத்துவ மனையில்

# சரிவர உணவு சப்ளை இல்லை ஏழை நோயாளிகள் அவதி

கோவில்பட்டி, ஜூலை. 22— இங்குள்ள அரசாங்க மருத்துவ மனையில் வழங்கப்பட்டு வந்த சாப்பாடு மற்றும் உணவுப் பொருட்களான இட்லி, காபி, ஆரஞ்சுப்பழம், வாழைப்பழம் முதலியன நிறுத்தப்பட்டது.

இதனல் அவதியுறும் நோயாளிகள் அச்சுத் தொழிலாளர் சங்க (சி ஐ டி யூ) செயலாளர் தோழர் சி. ராமசுப்புவிடம் முறையிட்டனர்.

### சி. ஐ. டி. யூ. கடிதம்

எனவே, உணவுப் பொருள் சப்ளை நிறுத்தப்பட்டது குறித்தும், அதனல் நோயாளிகள் படும் கஷ்டத்தையும் எடுத்துக் கோரி நிறுத்தப்பட்ட உணவுப் பொருட்களை உடனே சப்ளை செய்ய தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று வற்புறுத்தி நெல்லை மாவட்ட மருத்துவ அதிகாரிக்கு சி ஐ டி யூ சங்கம் கடிதம் எழுதியது. இந்த நடவடிக்கையை மேற்கொள்வதில் தாமதம் ஏற்படுமாயின் நோயாளிகள் ஸ்தல மருத்துவ அதிகாரிகளை 'கெரோ' செய்யும் நிலை ஏற்படும் என்று குறிப்பிட்டிருந்தது.

கடிதம் எழுதிய 3 நாட்கள் கழித்து மாவட்ட மருத்துவ அதிகாரி மருத்துவ மனைக்கு விஜயம் செய்து நோயாளிகளிடம் நேரிடையாகவே விசாரணை செய்தார்.

நிறுத்தப்பட்ட உணவுப் பொருள்கள் அனைத்தையும் உடனே சப்ளை செய்ய வேண்டும் என்றும், எக்காரணத்தைக் கொண்டும் நிறுத்தக்கூடாது என்றும் உத்திரவிட்டார். அன்று தோழர் சி. ராமசுப்புவும் உடனிருந்தார்.

### பெயரளவுக்கே உணவு சப்ளை

அன்றிலிருந்து ஏதோ பெயரளவுக்கு ஏழை நோயாளிகளுக்கு உணவு வழங்கப்படுகிறது. நூறு சாப்பாடு வழங்க வேண்டிய மருத்துவமனையில் 15லிருந்து 20வரைதான் தரப்படுகிறதாம்.

எனவே, மாவட்ட மருத்துவமனை அதிகாரி இப்பிரச்னையில் மீண்டும் தலையிட்டு சரியான முறையில் —முறைகேடு இல்லாமல் —உணவு சப்ளை செய்ய தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தோழர் சி. ராமசுப்பு வேண்டியுள்ளார்.

## தாழையூத்து சிமெண்ட் தொழிலாளர் மீது

# ரௌடிகள் வெறித் தாக்குதல்

## தொழிலாளர்களைப் பிளவு படுத்த நிர்வாகத்தின் திட்டமிட்ட செயலா?

தாழையூத்து, ஜூலை. 21— இங்குள்ள சிமெண்ட் ஆலையில், சிஐடியூவின் வளர்ச்சியைப் பொறுக்காத நிர்வாகம், அதன் வளர்ச்சியைத் தடுக்கவும் அதற்காகதொழிலாளர்களைப்பிளவுபடுத்தவும் பல்வேறு சாகச வழிகளைக் கையாண்டு வருகிறது.

கடந்த சில நாட்களாக ரவுடிகளை ஏவி சி ஐ டி யூ ஊழியர்கள் மீதும், தொழிலாளர்கள் மீதும்.தாக்குதல் நடத்தும் வெறிச் செயலில் இறங்கியுள்ளது.

வாட்ச்மேன்கள் என்ற பெயரில் தொழிலாளர்கள் குடியிருக்கும் காலனிக்குள், கத்தி, வேல்கம்பு, வாள் போன்ற ஆயுதங்களுடன் நடமாடவிட்டு தொழிலாளர்களைப் பயமுறுத்திவந்ததுடன், வீடுகளுக்குள்ளும் புகுந்து தொழிலாளர்களது குடும்பத்தினரைத் தாக்கிடவும் ஆரம்பித்திருக்கிறார்களாம்.

### ஓட ஓட விரட்டினர்

கடந்த 14-ந் தேதியன்று மாலை 6-30 மணியளவில், ஒர்க்ஷாப்டிபார்ட்மெண்டில் கலாசி மேட்டாக வேலை பார்த்துவரும் தோழர் எம். முகம்மது என்ற தொழிலாளியின் வீட்டில் புகுந்து அவருடைய மகன் கோயாவை தாக்கினராம். அடிபொறுக்க மாட்டாத கோயா, மணி என்ற தோழரின் வீட்டினுள் தஞ்சம் புகுந்ததைக் கண்ட ரவுடிக் கும்பல், தொடர்ந்துவிரட்டிச்சென்று வீட்டிற்குள் நுழைந்து அரிவாளால் வெட்ட முயற்சித்துள்ளார்களாம். அங்கிருந்தும் தப்பியகோயாவெளியே ஓடவே, காலனியில் இருந்த பெண்கள் அவரை ஓர் வீட்டில் அடைத்து வைத்துப் பாதுகாத்துள்ளதாகத் தெரிகிறது.

### தாய் தந்தையரை தாக்கினர்

ஏமாற்றம் அடைந்த ரவுடிக் கும்பல், கோயாவின் தாய்—தந்தையரை அடித்து நொறுக்கியதோடு, இந்த நிகழ்ச்சி சம்பந்தமாக வெளியில் உள்ளவர்களிடம் யாராவதுசொன்னல்கொலை செய்து விடுவோம என்று மிரட்டிவிட்டும் சென்றூர்களாம்.

### போலீசும் உடந்தை?

இந்த வெறித்தாக்குதல் சம்பந்தமாக கருப்பசாமித் தேவர் என்ற வாட்ச்மேன் உட்பட பலர்மீது போலீசில் புகார் கொடுத்தும். மேலதிகாரிகளிடம் முறையிட்டும் இதுவரை எவ்வித நடவடிக்கையும் இல்லையாம்.

### சிஐடியூ வற்புறுத்தல்

இத்தாக்குதலுக்கு நிர்வாகத்தின் அதிகாரிகளது தூண்டுதலே காரணம் என்றும், குற்றவாளிகள் மீது போலீசார்தக்கநடவடிக்கை எடுக்கவேண்டும் என்றும் சிஐடியூ வற்புறுத்தியுள்ளது.

# ஜனநாயக உரிமைகள் பாதுகாப்பு பொதுக்கூட்டம்

மேலாண்மை. ஜூலை. 22— முகவை மாவட்டம் மேலாண்மறை நாட்டில் கடந்த 20ந் தேதியன்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் ஜனநாயக உரிமைகள் பாதுகாப்புப் பொதுக்கூட்டம் நடந்தது.

தோழர்கள் சு. நல்லதம்பி, மேலாண்மை செ. பொன்னுச்சாமி,(முற்போக்குஎழுத்தாளர் சங்கம்). பி.கிருஷ்ணசாமி(சிஐடியூ) ஆகியோர் புதிய நெருக்கடி நிலை குறித்தும் பேசினுர்கள்.

இக்கூட்டத்தில் அவசர நிலையை ரத்துச் செய்யக் கோரியும், 'மிசா', பாதுகாப்புச்சட்டங்களை வாபஸ்பெற கோரியும்,அச்சட்டங்களின் கீழ் கைது செய்யப்பட்டு காவலில் உள்ள தலைவர்களை உடனே விடுதலை செய்யக் கோரியும் மத்திய அரசுக்கு வேண்டுகோள் விடப்பட்டது.

# பொதுக்கூட்டத்தில் கல்லெறி

## பஞ்சாயத்துதலைவர் தூண்டுதல்?

நெய்வேலி, ஜூலை.21— நெய்வேலிஏரியாவில்உள்ள நடுக்குப்பம்கிராமத்தில்அண்மையில் நடந்த விவசாயிகள் சங்கப் பொதுக்கூட்டத்தில் சில காலிகள் கல்லெறிந்து கலாட்டா செய்தனர். இந்த விஷமத்தனத்திற்கு அப்பகுதி பஞ்சாயத்துத் தலைவரின் தூண்டுதல்தான் காரணம் என்றுபேசப்படுகிறது.

கடந்த 11ந் தேதியன்று நடந்த அக்கூட்டத்திற்கு தோழர் எஸ். கண்ணன் தலைமை வகித்தார்.

தோழர்கள் என் ஆர் ராமசாமி, எஸ். ரத்தினசபாபதி. ஏ எஸ் நாகராஜன் ஆகியோரும் பேசினர்.

தோழர் நாகராஜன்பேசும் போது, கிராமத்தில் ஜீனி, கோதுமை முதலியன சரியாக சப்ளை செய்யப்படுவதில்லை என்றும், கொடுக்கப்படும் கோட்டா என்னவாகிறது என்றும் பேசினர்.

இவ்வாறு பேசிக் கொண்டிருந்தபோது சரமாரியாக கற்கள் மேடையில் வந்து விழுந்தன. அக்கல்லெறியில் 13வயது சந்திரன். 10வயது காசி, 9வயது பன்னீர் மற்றும் பலருக்கு பலத்த காயம் ஏற்பட்டது. உடனே ஆயுத போலீஸ்மேடையைச்சுற்றி காவலுக்குநின்றனர்.

ஆனலும் மீண்டும் கல்லெறியப்பட்டது. இதில் போலீஸ் உட்பட 5 பேருக்கு கடுமையான காயம் ஏற்பட்டது. போலீசார் நாலா பக்கமும் சென்று காலிகளை விரட்டியடித்தபின் கூட்டம் தொடர்ந்து நடந்தது.

இக்கூட்டத்தில் காலிகளின் நீசச் செயலுக்குக் கண்டனம் தெரிவிக்கப்பட்டது. அவசர நிலையை ரத்து செய்யக் கோரியும், 'மிசா' பாதுகாப்புச் சட்டம் போன்றவற்றை ரத்துச் செய்யக் கோரியும்,அச்சட்டங்களின் கீழ் கைது செய்யப்பட்டு காவலில் உள்ள அரசியல் தலைவர்களையும், ஊழியர்களையும் உடனே விடுதலை செய்யக்கோரியும் மத்திய அரசுக்கு வேண்டுகோள் விடப்பட்டது.

### போலீஸ் அதிகாரிகளிடம் தலைவர்கள் வற்புறுத்தல்

இக்கல்லெறி சம்பவமாக தோழர்கள் எம். ரத்தினசபாபதி, கே. திருவேங்கடம் ஆகிய இருவரும் போலீஸ் டி. எஸ். பி.யை நேரில் சந்தித்து கல்லெறி சம்பந்தமாக நடவடிக்கை எடுக்க வற்புறுத்தினர். அதன் பின்னர் அவர் நடுக்குப்பம் சென்று நடவடிக்கை எடுத்ததைத் தொடர்ந்து கல்லெறிந்தது சம்பந்தமாக வழக்கு ஒன்று பதிவுசெய்யப்பட்டுள்ளதாம்.

# திருமதி பெரோன் பதவி விலக நிர்பந்தம்

பியூனேஸ்ஏர்ஸ், ஜூலை. 21— அர்ஜெண்டினு நாட்டில் ஏற்பட்டுள்ள பணவீக்கம், விலைவாசிஉயர்வு ஆகிய பொருளாதார நெருக்கடி அதன் தொடர்ச்சியான அரசியல் நெருக்கடி ஆகியவற்றின் காரணமாக அந்நாட்டு ஜனதிபதி திருமதி மேரியா எஸ்டெலா பெரோன் பதவியிலிருந்து விலகுமாறு நிர்ப்பந்திக்கப்படலாம் எனத் தெரிகிறது.

அர்ஜெண்டினு நாட்டின் ரஸ்புடீன்என அழைக்கப்பட்டவரும் அந்நாட்டு சமுகநல அமைச்சரும் ஜனதிபதியின் வலதுகரம் போன்றவருமான ஜோஸ் லோபெஜ் ரேகா என்பவர் அரசாங்க குழுவிற்காக நாட்டை விட்டு நிரந்தரமாக அனுப்பப்பட்டார்.

அவரை பதவியிலிருந்து நீக்கவேண்டும் என ஏற்கெனவே அர்ஜெண்டினு தொழிலாளர்கள்வற்புறுத்தினர். 2நாள் பொதுநாள் வேலைநிறுத்தத்தில் கூட இதனை ஒரு கோரிக்கையாக கொண்டிருந்தனர். பொது வேலை நிறுத்தம் முடிவடைவதற்குள் 150 சத வீத சம்பள உயர்வு ஒப்புக்கொள்ளப்பட்டதும் அதன் பின்பும் மீண்டும் விலைவாசி உயர்வு அதிகரிக்கவே மீண்டும் சம்பள உயர்வு கோரி தொழிலாளர் போராட ஆரம்பித்துள்ளனர் என்பதும் தெரிந்ததே.

இப்போராட்டங்களின் தொடர்ச்சியாகவே அர்ஜெண்டினுவின் ரஸ்புடீன் எனக்கூறப்பட்ட லோபெஜ் ரேகா வெளிநாடு அனுப்பப்பட்டுள்ளார்.

இதன் தொடர்ச்சியாக கணவன் டோமின்கோ பெரோன் இறந்தவுடன் அவருக்கு பின்தாணுகவே அர்ஜெண்டினுவின் ஜனதிபதிக கொண்ட திருமதி மேரியோஎஸ்டெலாபெரோனும் பதவியிலிருந்து இறங்குமாறு நிர்பபந்திக்கப்படுவார். எனத் தெரிகிறது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-16 பைபாஸ் ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.